[6th September 1960

ஏற்படுத்துவதைப்பற்றிக் கேட்கிறார். அந்தக் கேள்வி 'ஔட் ஆப் ஆர்டர்' ஆகும். ஏனென்றால், உபகேள்வி மூலக் கேள்விக்குச் சம்பந்தம் உடையதாக இருக்கவேண்டும்.

### *Polytechnics*

*480 *Q.*—**Sri A. VEDARATHNAM**: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இம்மாநிலத்தில் தனியார் துறையில் ஆரம்பிக்க இருக்கும் பாலிடெக்னிக்குகள் எத்தனை? எங்கெங்கே?

(ஆ) அவற்றில் போதிக்கப்போகும் தொழில்கள் என்னென்ன?

(இ) இவற்றிற்கு அரசாங்கம் அளிக்கும் உதவி என்ன?

(ஈ) அவைகள் எப்போது துவங்கும்?

The Hon. Sri C. SUBRAMANIAM: (*a*) It is proposed to establish 10 more polytechnics in the Third Plan period, i.e., during 1961—65. The distribution of these between the public and the private sector and their location have not yet been settled. Tentatively, it is proposed that 8 of the 10 polytechnics should be non-Government Institutions.

(*b*) Usually instruction is imparted, to start with, in the three basic courses, viz., Civil, Mechanical and Electrical Engineering.

(*c*) The State Government give 25 per cent of the total non-recurring cost and 50 per cent of the recurring cost arrived at after deducting the tuition fees, any other net income derived in working the institution and the grant given by the Government of India.

(*d*) It has been tentatively planned to start 3, 3, 2 and 2 polytechnics in the first four years of the Third Plan period respectively.

**Sri A. VEDARATHNAM**: அரசாங்கம் கொடுக்கும் உதவி அல்லாமல் தனியார் இந்தப் பாலிடெக்னிக்கை ஆரம்பிக்கவேண்டுமானால், அவர்கள் இதற்காக வைக்கவேண்டிய மூலதனம் எவ்வளவு என்பதைத் தயவுசெய்து அறிவிக்கமுடியுமா?

**The Hon. Sri C. SUBRAMANIAM**: இப்பொழுது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே இதை மாற்றியமைக்கவேண்டுமென்று பரிசீலனை செய்து கொண்டிருக்கிறார்கள். ஆகையால், மத்திய சர்க்காரிடத்திலிருந்து அதுபற்றி முடிவான தகவல் இன்னும் வரவில்லை. தகவல் வந்தால்தான் சொல்லமுடியும்.

**Sri A. GOVINDASAMY**: நெய்வேலிப் பகுதியில் அரசாங்கத் துறையில் ஒரு பாலிடெக்னிக் திறக்க அரசாங்கம் முயற்சிக்குமா?

6th September 1960]

THE HON. SRI C. SUBRAMANIAM : எந்த எந்த இடத்தில் வைப்பது என்று இப்பொழுது குறிப்பாகச் சொல்ல முடியாது. ஆனால், கனம் அங்கத்தினர் சொன்னதும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளப்படும்.

SRI J. MATHA GOWDER : மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஆரம்பிக்கப்படும் பத்து பாலிடெக்னிக்குகளில் ஒன்றை பாலிடெக்னிக்கே இல்லாத நீலகிரி ஜில்லாவில் ஆரம்பிக்க சர்க்கார் முன்வருமா ? அப்படியில்லையென்றால், தனியார் யாராவது ஆரம்பிக்க முன்வந்தால் அவர்களுக்கு உதவி செய்ய சர்க்கார் தயாராக இருப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : எந்த எந்த இடத்தில் வைப்பது என்று இன்னும் முடிவாகவில்லை. நீலகிரியைப்பற்றி அவர்கள் சொன்ன காரணத்தால், அதுவும் கவனிக்கவேண்டிய விஷயம் என்று தெரியவருகிறது.

*Express way*

*481 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் துரிதப்பாதைகள் (Express ways) அமைப்பதைக் குறித்து மாநில சர்க்கார் மத்திய சர்க்காருக்குத் திட்டங்கள் அனுப்பியுள்ளார்களா ?

(ஆ) அப்படியாயின் அவைகளின் விபரங்களென்ன ?

THE HON. SRI P. KAKKAN : (a) & (b) The proposal for the conversion of Madras-Bangalore Road as an expressway has been included in the Third Five-Year Plan for National Highways which will be forwarded to the Government of India shortly. There is also another proposal for the improvement of the road from Neyveli to Madras via Vikravandy to Express Highway Standards, regarding which the Government of India have been consulted on the scope of their financial assistance.

SRI S. M. ANNAMALAI : இந்தப் பாதைகளுக்குச் செலவாகும் தொகை எவ்வளவு? அதற்கு மத்திய சர்க்கார் எவ்வளவு தருவார்கள் என்று சொல்லமுடியுமா ? மற்ற மாநிலங்கள் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே பல பாதைகளைப் போட்டிருக்கிறார்களே, ஏன் நம்முடைய மாநிலத்தைப் பொறுத்தவரையில் இன்னும் 'திட்டம் அனுப்பியிருக்கும் நிலையில்' இருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : எவ்வளவு மத்திய சர்க்காரிடத்திலிருந்து கிடைக்கும் என்பது சம்பந்தமாக நாம் எழுதி தெரிந்துகொண்டுதான் பின்னால் முடிவு செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.